நகரத்தார் இதழ்

# மதுரை மலர்





சித்திரைச் சிறப்பிதழ் - 1992

ஆசிரியர் - சுப. செந்தமிழன்

ஓம்
தாய் தீப்பாய்ந்தாளுக்கு வணக்கம்
தமிழ் அன்னைக்கு வணக்கம்

செய்யும் தொழிலே தெய்வம்

# நகரத்தார் இதழ்

# மதுரை மலர்

மலர் : 5 சித்திரை - 1992 இதழ் : 11

ஆசிரியர் :

சுப. செந்தமிழன் B.A

துணை ஆசிரியர் :

இராசகுமாரி செந்தமிழன்

அலுவலகம் : 5, யானைக்காரச் சந்து ..
மீனாட்சி அம்மன் கோவில் தெரு, மதுரை - 625 001.



தமிழ்நாடே வாழ்க் - எம்
தாய் நாடே வாழ்க
அமிழ்தாகிய இயலிசை கூத்தென்னும்
தமிழாகிய உயிர்தனையும் விழுமிய தமிழ்நாடே வாழ்க

புரட்சிக்கவிஞர்
பாரதிதாசனார்

**மா மதுரை**

| | | |
|---|---|---|
| மதுரையின் பரப்பு | ... | 51.85 சதுர கிலோ மீட்டர் |
| மதுரை மாவட்டத்தின் பரப்பு | ... | 6558 ச. கி. மீ. |
| நகரின் மக்கள் தொகை | ... | 10 லட்சம் |
| மாநகராட்சி பிரிவுகள் | — | 72 வார்டுகள் |
| மாநகராட்சிப் பகுதியில் வாக்காளர்கள் | — | 6,30,091 |
| மதுரை நகரவைத் தொடக்கம் | — | 1866 |
| மதுரை நகரவையின் முதல் தலைவர் | — | வி.எச். லீவிங் அவர்கள் |
| மதுரை மாநகராட்சியான வருடம் | — | 1971 |
| மாநகராட்சியின் முதலாவது மாநகரத் தந்தை | — | S. முத்து அவர்கள் |

**மதுரை**
**பெயர்க் காரணம்:**
**(இலக்கிய புராண, வரலாற்று செய்திகள்)**

**கூடல் நகர்:** சங்ககாலத்தில் மதுரையின் பெயர் கூடல் நகர மாகும். புறப்பாட்டு என்னும் தமிழ் நூல் மதுரை மாநகரினை ''தமிழ் கெழு கூடல்'' எனக் கூறுகின்றது சிலப்பதிகாரம். ''ஓங்குயர் கூடல்'' எனப் போற்றி புகழுகின்றது.

**மதுரா நகர்:** கடம்பவனக் காட்டை திருத்தி நகராக அமைத்தான் குலசேகர பாண்டியன். சோம சுந்தரக்கடவுள் தன் சடையிலுள்ள சந்திரனின் அமுதத்தை சிந்தி புதியதாக உருவான நகருக்கு ஆசி வழங்கினான். மதுரமயமான தன்மையால் மதுரா

---

1866ல் மதுரை நகரவை அமைப்பின் கீழ் வந்தது. அன்றைய மக்கள் தொகை 41,600 ஆகும். அன்றைக்கு நகரின் பரப்பளவு 2.6 சதுர கிலோ மீட்டர்.

நகர் எனப் பெயர் பெற்று நாளடைவில் மதுரை நகர் என்று அழைக்கப்பட்டது.

**மதிரை :** சோழர் குலத்திற்கு கதிரவனும், சேரர் குலத்திற்கு நெருப்பும், பாண்டியர் குலத்திற்கு திங்களும் சுடராக இருந்தது. திங்களுக்கு மதி என்றொரு பெயருண்டு. திங்கள் குலச்சுடரை கொண்ட பாண்டியன் தன் குலச் சுடரை குறிக்கும் வகையில் மதிரை எனப் பெயரிட்டான். மதிரை என்ற சொல் நாளடைவில் திரிந்து மதுரை ஆகியது என்று தேவநேயப் பாவணர் கூறுகின்றார்.

**மருதை நகர் :** மருதை மரங்கள் செழித்து வளர்ந்து இருந்தமையால் மருதை எனப் பெயர் பெற்று பின் மதுரையானது என்று கூறப்படுகின்றது.

## வரலாற்றில் மதுரை

| | | |
|---|---|---|
| அ) கடைச் சங்க காலம் | — | ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் |
| கி.பி. மூன்றாம் நூற்றாண்டுகளுக்கு முன்னுள்ள காலம் | — | தலையாலங்கானத்து செரு வென்ற நெடுஞ்செழியன் உக்கிரப்பெருவழுதி |
| ஆ) கி.பி. மூன்றாம் நூற்றாண்டிலிருந்து கி. பி. ஆறாம் நூற்றாண்டு வரை | — | களப்பிரர் ஆட்சி |
| இ) கி. பி. 560 – 590 | — | பாண்டியன் அரிகேசரிமாறவன் |
| ஈ) கி. பி. 10–12 நூற்றாண்டு வரை | — | தஞ்சை சோழர்கள் |
| உ) 1012 – 1044 | ... | சோழ அரசின் பிரதிநிதிகள் |
| ஊ) 12ம் நூற்றாண்டு இறுதியில் | ... | மீண்டும் பாண்டியர்கள் |
| எ) கி.பி. 1328 | ... | மாலிக்காபூர் படையெடுப்பு |

---

புலவர்கள் கூடும் இடமாதலினால் கூடல் என்றும், நான்கு மாடங்கள் மலிந்திருந்தமையால் மாடக் கூடல் என்றும் பெயர் பெற்றது.

---

எ) கி.பி. 1330–1371 ... சுல்தான்கள் ஆட்சி

ஐ) கி.பி. 1371–1736 ... நாயக்கர்கள் ஆட்சி

ஒ) கி.பி. 1736–1741 ... ஆற்காட்டு நவாப் ஆட்சி

ஓ) கி.பி. 1741–1743 ... மராட்டியர் ஆட்சி

ஔ) கி.பி. 1743 ... மீண்டும் நவாப் ஆட்சி

ஃ) கி.பி. 1790 முதல் ... ஆங்கிலேயர் ஆட்சி

கி.பி. 1947 ... டில்லியின் கீழ் அரசு ஆட்சி

## இலக்கியங்களில் மதுரை

''மண்ணூற ஆழ்ந்த மணிநீர்க்கிடங்கின்
விண்ணூற ஓங்கிய பல்படைப்புரிசை''
''மழையாடு மலையின் நிவந்தமாடமொடு
வையை அன்னவழக்குடை வாயில்''
''சில் காற்றிசைக்கும் பல்புழைநல்லில்
ஆறு கிடந்தன்னஅக நெடுந்தெருவில்''

—மதுரைக்காஞ்சி

மாடம் ஓங்கியமல்லன் மூதூர்

—நெடுநல்வாடை

''புலவர் நாவிற்பொருந்திய பூங்கொடி
வையைஎன்ற பொய்யாக்குலக்கொடி''

—சிலப்பதிகாரம்

## சங்க காலத்தில் மதுரை

''தமிழ்நிலை பெற்ற தாங்குருமரபின்
மகிழ்நனை மறுகின் மதுரை''

— சிறுபாணாற்றுப்படை

''தமிழ்கெழு கூடல் என்று புறநானூறும்'' தென்தமிழ்மதுரை என்று மணிமேகலையும் கூறுகின்றது

''உயர்மதிற் கூடலின் ஆய்ந்த ஒண்டீந்தமிழ்''

—மணிவாசகர்

---

மதுரை கணக்காயனார், நக்கீரனார், கூலவாணிகன், சீத்தலைச் சாத்தனார், மருதனிள நாகனார், மதுரைத் தமிழ்க் கூத்தனார் மற்றும் பல புலவர்கள் இருந்தனர்.

---

## இறை உணர்வு மிகுந்த மதுரை



தமிழ் மணத்துடன், இறை உணர்வும் மிகுந்த ஊர் மதுரையென்றால் அது மிகையில்லை என்பதை நாடறியும். எங்கு நோக்கினும் கோவில். கோவில் மாநகரம் என்ற பெயரும் மதுரைக்கு உண்டு.

## அன்னை மீனாட்சியம்மன் கோவில்

1) அஷ்ட சக்தி மண்டபம் 2) மீனாட்சி நாயக்கர் மண்டபம்
3) முதலி மண்டபம் 4) பொற்றாமரைக்குளம்
5) ஊஞ்சல் மண்டபம் 6) கிளிக்கூட்டு மண்டபம்
7) அன்னை மீனாட்சி கோவில் 8) முக்குறுணி விநாயகர்
9) கம்பத் தடி மண்டபம் 10) சுவாமி கோவில்
11) ஆயிரங்கால் மண்டபம் 12) மங்கையர்கரசி மண்டபம்
13) சேர்வைக்காரர் மண்டபம் 14) சங்கப்புலவர் கோவில்
15) அருள்மிகு கல்யாண சுந்தரர் சன்னதி
16) கீழப்பூங்குடி கூ. க. அரு. பசுமடம் 17) புதுமண்டபம்

மதுரை மீனாட்சியம்மன் கோவில் மேற்கண்டவாறு அமைந்துள்ளது. மதுரை மீனாட்சியம்மன் கோவிலின் பரப்பு 15 ஏக்கராகும். விசுவநாத நாயக்கர் கி.பி. 1560ல் இக் கோவிலை கட்டும் திட்டங்களை மேற்கொண்டார். இக் கோவில் திருப்பணி முடிக்க சுமார் 120 ஆண்டுகள் ஆகியது. 470 கராட்டில் வைரக்கிரீடம் செய்யப்பட்டு மீனாட்சியம்மனுக்கு சூடப் பெற்றுள்ளது. 6 கிலோ கிராம் தங்கத்தால் தங்ககவசம் செய்யப்பெற்றுள்ளது. மாதம் ஒரு திருவிழா மீனாட்சியம்மனுக்கு நடைபெறும். திருவிளையாடற் புராணம் மதுரையின் பெருமையை கூறும். மீனாட்சியம்மன் ஆலயத்திலுள்ள பதினான்கு கோபுரங்களில் தெற்குகோபுரமே உயரமானது. இதன் உயரம் 160 அடி. வடக்கு ஆடி வீதியில் இசைத் தூண்கள் உள்ளன.

**செல்லத்தம்மன் கோவில்** இக்கோவில் சிம்மக்கல் பகுதியில் வடக்கு மேஸ்திரி வீதியில் உள்ளது. கையில் சிலம்புடன் கூடிய கண்ணகி சிலை .இங்குள்ளது இக்கோவிலில் செண்பகவல்லி முதல் தெய்வமாகும்.

**கூடலழகர் கோவில் :** இது வைணவக் கோவிலாகும், மேற்குமாசி வீதியும் தெற்குமாசி வீதியும் சந்திக்கும் இடத்திற்கு அருகிலுள்ளது இங்கு திருமால் இருந்த கோலம், நின்ற கோலம், அமர்ந்த கோலம் ஆகிய மூன்று வடிவங்களில் காட்சி தருகின்றார் கோயில் மூலவர் கூடலழகர்.

**இம்மையில் நன்மை தருவார் கோவில் :** இவ் ஆலயம் மேலமாசி வீதியின் தென் கோடியிலுள்ளது. சோமசுந்தரக் கடவுள் சுந்தரபாண்டிய அரசனாக வந்து தடாதகைப்பிராட்டியரை மணந்து பாண்டிய நாட்டை ஆட்சி செய்தார் இக்கோவிலில் அவர் சிவபூசை செய்ததாக திருவிளையாடற் புராணம் கூறுகின்றது.

**திருஆப்புடையார் கோவில்** இக்கோவில் செல்லூரில் வைகையின் வடகரையிலுள்ளது. திரு ஆப்புடையார் என்பது இங்குள்ள இறைவனின் பெயர். இறைவியின் பெயர் குரவம் கமழ் குழல் அம்மை. சோழாந்தகன் என்னும் பாண்டியன் பொருட்டுச் சிவபெருமான் ஓர் ஆப்பினிடத்தில் தோன்றியருளிய இடமாதலால் இந்த இறைவனுக்கு ஆப்புடையார் என்று பெயர். இவ் ஆலயம் ஞான சம்பந்தப் பெருமானின் பாடல் பெற்றது.

**நக்கீரர் கோவில் :** இக்கோவில் மேலமாசி வீதியில் உள்ளது. இது சங்கத்தார் கோவிலாகும். இக்கோவிலில் நக்கீரர் சிலையும், மீனாட்சி சுந்தரேசுவரர் சிலையும் உள்ளது.

**மாரியம்மன் கோவில் :** வண்டியூரில் இக்கோவில் உள்ளது. இக்கோவிலும் கண்ணகி கோவில் என்பது சிலரின் கருத்தாகும். ஆடித்திங்களில் மாரியம்மன் விழா நடைபெறும். அவ்விழாவில் சிலம்பு முக்கிய இடம் பெறுகின்றது.

**சீனுவாசப் பெருமாள் கோவில் :** இக்கோவில் தல்லாகுளத்தில் உள்ளது. இது புகழ் பெற்ற பழமை மிக்க வைணவக் கோவிலாகும்.

**மதன கோபால சாமி கோவில் :** தெற்கு மேலமாசி வீதிகள் கூடுமிடத்தில் மதன கோபாலசாமி கோவிலுள்ளது. இக்கோவில் நாயக்கர் ஆட்சியில் கட்டப் பெற்றது.

**தட்டார் கோவில் :** இக்கோவில் எழுத்தாணிக்காரர் தெருவிலுள்ளது. பொற்கொல்லர்களின் குல தெய்வமாக இக்கோவில் தெய்வம் உள்ளது.

**பிட்டு வாணிச்சியம்மன் கோவில் :** சிவபெருமானுக்கு பிட்டு வழங்கிய வாணிச்சி இப்பகுதியில் பிட்டு விற்றதாக வரலாறு கூறுகின்றது. இங்கு வணங்கப்படும் சப்தகன்னிகைகளுக்கு பிட்டு வாணிச்சியம்மன் என்று பெயர்.

**நாகர்கோவில் :** வைகை கரையில் உள்ளது. இக்கோவிலில் அளவற்ற நாகர் உருவங்கள் உள்ளது

**சங்கப் புலவர் கோவில் :** மதுரை மீனாட்சி ஆலயத்தில் சங்கப் புலவர்கள் கோவில் உள்ளது. இக் கோவில் 14-9-1974ல் திறக்கப்பட்டது.

**பள்ளிவாசல்கள் :**

1) தாசில்தார் பள்ளிவாசல்
2) காஜியார் தெரு பெரிய பள்ளிவாசல்
3) மேலமாசி வீதி பள்ளிவாசல்
4) முனிச்சாலைப் பள்ளிவாசல்
5) கட்ராப்பாளையம் தெரு பள்ளிவாசல்
6) சங்கம் பள்ளிவாசல்

இசுலாமிய பெரியார்கள் அடக்கம் செய்யப்பட்ட இடம் ''தர்கா'' ஆகும்.

**தர்கா :**

1) சின்னக்கடை தர்கா
2) கான்சாகிப் தர்கா
3) சிக்கந்தர் தர்கா
4) மீனா நூருதீன் தர்கா
5) கோரிப்பாளையம் தர்கா

**கிறிசுதுவ ஆலயங்கள்**

1) புனித மரியன்னை தேவாலயம்
2) புனித செபமாலை அன்னை ஆலயம்
3) லூர்து அன்னை ஆலயம்
4) திரு இருதய ஆலயம்
5) புனித சூசையப்பர் ஆலயம்
6) அன்னை வேளாங்கன்னி ஆலயம் அண்ணாநகரில் 1979 ம் ஆண்டில் கட்டப்பட்டது
7) புனித ஜார்ஜ் ஆலயம்
8) வெப் நினைவாலயம்
9) 1931 ல் மதுரை அமெரிக்கமிஷனிரியால் இந்த சிற்றாலயம் கட்டப்பட்டது
11) இரசண்ய ஆலயம்

---

**குட்டைய மடம்:** தெற்கு வெளி வீதியிலுள்ளது. மதுரை மீனாட்சி அம்மன் கோவிலில் நந்திமண்டபத்தை எட்டுத்தூண்களுடன் அமைத்தவர் குட்டைய சுவாமிகள்.

---

## மதுரையை ஆண்ட நாயக்க மன்னர்கள்

| | | |
|---|---|---|
| 1) | விசுவநாத நாயக்கர் | 1524 – 1564 |
| 2) | முதலாம் கிருட்டிணப்ப நாயக்கர் | 1564 - 1572 |
| 3) | வீரப்ப நாயக்கர் | 1572 – 1595 |
| 4) | இரண்டாம் கிருட்டிணப்ப நாயக்கர் | 1595 – 1601 |
| 5) | முத்து கிருட்டிணப்ப நாயக்கர் | 1601 – 1609 |
| 6) | முதலாம் முத்து வீரப்ப நாயக்கர் | 1609 – 1623 |
| 7) | திருமலை நாயக்கர் | 1623 – 1659 |
| 8) | குமரமுத்து வீரப்ப நாயக்கர் | ... ... |
| 9) | சொக்கநாதர் மனைவி ராணிமங்கம்மாள் | 1659 – 1682 |
| 10) | மூன்றாம் மூத்து வீரப்ப நாயக்கர் | 1682 – 1689 |
| 11) | ராணிமங்கம்மாள் | 1689 – 1706 |
| 12) | விஜயரங்கநாத சொக்கநாதர் | 1706 – 1732 |
| 13) | மனைவி மீனாட்சி அரசு | 1732 – 1736 |

—நன்றி : **தமிழரசு மே 1972**

## மதுரை – திருவிழாக்கள்

1) சித்திரை திருவிழா
2) ஆடி முளைகொட்டும் விழா
3) ஆவணி–பிட்டு திருவிழா
4) தை-அட்டமி பிரதட்சண விழா
5) மாசி மக விழா

## மதுரையிலுள்ள குறிப்பிடத்தக்க கடை வீதிகள் :

1) கோரிப்பாளையம்
2) அம்மன் சன்னதி
3) டவுன் ஹால் ரோடு
4) கீழவாசல்

**மகால்** நகரின் நடுவில் அமைந்துள்ளது. விளக்குத்தூண் அருகி லுள்ளது. இந்த அரண்மனை 1634ல் கட்டப்பட்டது. இங்கு 248 தூண்கள் உள்ளது. சுமார் 5 மீட்டர் சுற்றளவில் தூண்கள் உள்ளது. அரண்மனையில் எந்தப் பகுதியிலும் இரும்போ, மரமோ இல்லை. திருமலை நாயக்கர் மகாலில் திருமலை மன்னரின் வரலாற்றைக் காட்டும் ஒலி - ஒளிக் காட்சி 1981ல் தொடங்கப்பட்டது. நுழைவுக் கட்டணம் நபர் ஒருவருக்கு ஒரு ரூபாய்.

திறந்திருக்கும் நேரம் காலை 9 Am to 12 Noon

மாலை 1 Pm to 4 Pm

ஒலி-ஒளிக்காட்சி ஆங்கிலத்தில் 6-45 Pm to 7-45 Pm

தமிழில் 8-00 Pm to 9-00 Pm

## தொழில்

**மீனாட்சி ஆலை :** 1921ல் பரவையில் கரு. முத்து தியாகராச செட்டியாரால் தொடங்கப்பட்டது.

**மதுரை ஆலை :**

1893 ல் ஆண்ட்ரு ஹார்வி, புராங்ஹார்வி சகோதரர்களால் ஹார்வி ஆலை அமைக்கப்பட்டது. இந்த ஆலையில் 20,000க்கு மேற்பட்ட தொழிலாளர்கள் பணியாற்றுகின்றனர்: மதுராகோட்ஸ் நிர்வாகத்தின் கீழ் இந்த ஆலை உள்ளது.

**சீதாலட்சுமி ஆலை :**

சி. எஸ். இராமாச்சாரியரால் இந்த ஆலை தொடங்கப்பட்டது. இந்த ஆலை. செயற்கை நார் பட்டு நூல் தயார் செய்கின்றது.

**விசாலாட்சி ஆலை :**

விளாங்குடி - லெ. நாராயணன் செட்டியார் அவர்களால் இந்த ஆலை தொடங்கப்பட்டது.

**சுங்கடி சேலை :**

மதுரையில் சுங்கடி சேலை தயாரிக்கும் பணி 300 ஆண்டுகளுக்கு முன்னால் தொடங்கப்பட்டது. சுருக்கம் பிடித்து நூல்கட்டுவதால் சுங்கடி சேலை எனப்பெயர் பெற்றது ஒருசேலை பிடிக்க குறைந்தது இரண்டு நாட்கள் ஆகும்.

**டி. வி. எஸ்.**

மதுரையில் டி. வி. எஸ். நிறுவனம் டி.வி. சுந்தரம் அய்யங்கார் அவர்களால் தொடங்கப்பட்டது. T.V.S. குருப் நிறுவனம் 1986ம் ஆண்டு கணக்குப்படி இந்தியாவின் 19வது இடத்தை பெறுகின்றது. T.V.S. நிறுவனப் பேருந்துகள் 1972ல் நாட்டுடமையாக்கப்பட்டது.

**குறிப்பிடத்தக்க தொழில் நிறுவனங்கள் :**

1) Fenner India
3) M.R.F.
2) Gold Spot
4) Madura Coats
5) Usha Cotton Mills
5) T. V. S. Work Shop
7) பாரி & கம்பெனி
8) S. V. செல்லம் சோப்

### மதுரை வீதிகள்

முகலிம்கள் ஆட்சிக் காலத்தில் ஜலாலுதின் அசன்ஷா என்பவர் மதுரை வீதிகளை அகலப்படுத்தினார்.

### ராயகோபுரம்

சுவாமி சந்நிதிக்கு நேரே உள்ளது. இது திருமலை நாயக்கரால் 1659ல் அடித்தளம் போடப்பட்டது.

### புதுமண்டபம்

1628 ல் திருமலை நாயக்கரால் கட்டத் தொடங்கப் பெற்று 1635ல் கட்டி முடிக்கப் பெற்றது. இந்த மண்டப நீளம் 333 அடியாகும். உயரம் 25 அடியாகும் 124 சிற்பத் தூண்கள்இங்குள்ளது இதன் பெயர் வசந்த மண்டபம்.

### மாரியம்மன் தெப்பக்குளம்

அன்னை மாரியம்மன் கோவிலின் எதிர்புறமுள்ள மாரியம்மன் தெப்பக்குளம் திருமலை மன்னரால் 1654ல் உருவாக்கப்பட்டது

### AIR INDIA, INDIAN AIR LINES

மதுரை, அவனியாபுரத்தில் AIR INDIA, INDIA AIR LINES உள்ளது.

### பாரதியார்

மதுரையிலுள்ள சேதுபதி மேல்நிலைப்பள்ளியில் பாரதியார் தமிழ் ஆசிரியராக பணியாற்றினார்.

### கான்சாகிப்

இவரது இயற்பெயர் முகமதுயூசுப்கான் முதலில் ஆர்காட்டு நவாப் படையில் பணியாற்றினான். பின் மதுரைப் பகுதியை ஏழு ஆண்டுகள் ஆண்டான். மேலூர்–அழகர் கோவில் சாலையில் வெள்ளாளபட்டியில் கோட்டை ஒன்று கட்டினான். இவன் நவாபினல் கைது செய்யப்பட்டு அரசரடிப் பகுதியில் தூக்கிலிடப்பட்டார். இவரது பெயரால் கான்சா மேட்டுத் தெரு என்று ஒரு தெருவிற்கு பெயர் உள்ளது.

## வரலாற்று புகழ் மிக்க இடங்கள்

1) மங்கம்மாள் சத்திரம்

2) மேலவாசல் கோட்டை பகுதி

3) அம்மன் சன்னதி எதிரிலுள்ள விட்டவாசல்

4) நாயக்கர் காலக் கட்டிடங்கள்

## மதுரையிலுள்ள குறிப்பிடத்தக்க பள்ளிகள்

1) சேதுபதி மேல்நிலைப் பள்ளி
2) சௌராசுட்டிர மேல் நிலைப் பள்ளி
3) ST. Mary's மேல்நிலைப் பள்ளி
4) மீனாட்சி சுந்தரேசுவரர் மேல்நிலைப்பள்ளி
5) நிர்மலா மேல் நிலைப் பள்ளி
6) ஔவை மாநகராட்சி மேல் நிலைப் பள்ளி
7) ஆயிரம் வைசியர் மேல் நிலைப்பள்ளி
8) தியாகராச மாதிரி மேல் நிலைப் பள்ளி
9) ST. Joseph உயர்நிலைப் பள்ளி

## மதுரையிலுள்ள குறிப்பிடத்தக்க நூலகங்கள்

1 தமிழ்ச் சங்க நூலகம்
2 காந்தி நினைவு நிதி நூலகம்
3 விக்டோரியா—எட்வர்டு மன்ற நூலகம்
4 சௌராசுடிர சபை நூலகம்
5 மாவட்ட தலைமை நூலகம்

## மதுரையில் நகரத்தார்

1) அமராவதி புதூர்வயிநாகரம் குடும்பத்தினரால் 1878 ல் அருள் மிகு மீனாட்சிஅம்மன் கோவிலில் முதல் திருப்பணி செய்யப்பட்டது.

2) 1924ல் கீழப் பூங்குடி கூ. க. அரு. குடும்பத்தினரால் கூ. க. அரு. பசுமடம் மீனாட்சி அம்மன் கோவில் மேல ஆடி வீதியில் தொடங் கப்பட்டது.

3) தொழில் அதிபர் லெ. நாராயணன் செட்டியார் அவர்கள் மீனாட்சி அம்மன் கோவில் அறங்காவலராக இருந்த காலத்தில்

அருள் மிகு மீனாட்சி அம்மனுக்கு தங்ககவசமும், வைரமுடியும் செய்யப் பெற்றது.

4) VN சிதம்பரம் செட்டியார் அவர்கள் மதுரை மீனாட்சி அம்மன் கோவில் தக்கராக இருந்தகாலத்தில் தங்கரதம் செய்யப்பெற்றது மீனாட்சி அம்மன் கோவில் V.N. சிதம்பரம் செட்டியார் அவர்களால் கல்யாண சுந்தரர் சன்னதி என்ற புதிய சன்னதி நிறுவப் பெற்றது.

5) மதுரையில் மீனாட்சி நூற்பாலை சிவகாமி நூற்பாலை கருமுத்து தியாகராசரால் தொடங்கப்பட்டது 1921ல் மீனாட்சி நூற்பாலை தொடங்கப்பட்டது.

6) லெ. நாராயணன் செட்டியார் — விசாலாட்சி நூற்பாலை

7) கல்லல் ஆ. முரு. சண்முகம் செட்டியார் — ருக்குமணி நூற்பாலை (சிலைமான்)

8) கலைமகள் நடராசன் செட்டியரீர் — கலைமகள் பேப்பர் மில்ஸ்

9) ஆரவயல் மு. சேவுகன் செட்டியார் — அருணா டூல்ஸ்

10) நம்மவரால் நகரில் பல கல்லூரிகள் நிறுவப் பெற்றுள்ளன

11) மதுரையிலிருந்து தனித் தமிழில் 'தமிழ்நாடு' என்ற இதழை கருமுத்து மாணிக்கவாசகர் வெளியிட்டார். தொடக்கம் ; 1951

12) மதுரையில் 1974ல் இராசா முத்தையா செட்டியார் அவர்களால் தொடங்கப்பட்டது

13) மதுரையிலிருந்து 15 கி.மீ தொலைவிலுள்ள திருவேடகத்தில் தேவகோட்டை சுப. சேவு. சேவுகன் செட்டியார் குடும்பத்தார் இக்கோவிலை புதுப்பித்து குடமுழுக்கு நீராட்டு விழாசெய்துள்ளனர்

## செய்திகள்

அ) மதுரையில் சிவன் சுந்தரபாண்டியனாக இருந்து அரசாண்டக் காரணத்தால் மதுரைக்கு சிவபுரம் என்ற பெயரும் உண்டு.

ஆ) பாண்டியனிடம் மாணிக்க வாசகப் பெருமானார் தென்னவன் பிரமராயன் என்ற பெயருடன் அமைச்சராக இருந்தார்.

இ) மதுரை மீனாட்சி ஆலயத்தில் பதினான்கு கோபுரங்கள் உள்ளன

ஈ) மகா வம்சம் நூலிலும், மெகாஸ்தனிஸ் குறிப்புகளில் மதுரையைப் பற்றி அளவற்ற செய்திகள் உள்ளது.

## அண்டர் வானம் தண்ணீர் பந்தல் தெரு

மதுரையில் முனிச்சாலைக்கு அருகில் அண்டர்வானம் தண்ணீர் பந்தல் தெருவுள்ளது. கோடையில் அந்தரவானப் பெருமாள் வைகை கரைக்கு எழுந்தருள்வர். அந்தக் காலத்தில் அந்தர வானப் பெருமாள் திருப் பெயரால் தண்ணீர் பந்தல் நடந்தது. அதன் அடிப்படையில் அத்தெருவின் பெயர் அந்தரவானப் பெருமாள் தண்ணீர் பந்தல் தெரு எனப் பெயர் பெற்றது. காலப் போக்கில் ''அந்தர வானப் பெருமாள் தண்ணீர் பெருமாள் தெரு என்பது அண்டர்வானம் தண்ணீர் பந்தல் தெருவானது.

## வடுகர்காவல் கூடத் தெரு

மதுரை நகரை காவல் புரிந்த வடுகர் வாழ்ந்த இடம் வடுகர் காவல் கூடத் தெருவாகும்.

## பாண்டியன் அகழித் தெரு

மதுரை நகரில் இருந்த அகழியின் அடிப்படையில் உருவானது அகழி பாண்டியன் தெருவாகும்.

## தெற்கு மாரட் வீதி

மாரட் என்பது ஆங்கிலேயரின் பெயராகும். தெற்குப் பகுதியில் மாரட் பெயரில் அமைந்தது தெற்கு மாரட் வீதியாகும்.

தஞ்சாவூரில் இருந்து வந்த வெற்றி வீரன் மல்லன் ஒருவன் சிம்மத்தை வென்றான். அவன் நினைவாக அமைந்தது சிம்மக்கல் அங்கே சிங்கத்துடன் கூடிய சிலை உள்ளது.

## வடக்கு பெருமாள் மேஸ்திரி வீதி

வெள்ளைக்காரத் துரை மாரட்டின் மேசுதிரியாக பெருமாள் இருந் தார். அவரின் பெயரில் பெருமாள் மேசுதிரி வீதி எனப் பெயர் ஏற்பட்டது.

## பத்து தூண் சந்து

மகாலுக்கு வடபகுதியில் கருங்கல்லால் ஆன பத்து உயரமான தூண்கள் உள்ளன. ஒவ்வொரு தூணும் ஏறத்தாழ 82 அடி உயர

உள்ள கல் ஒன்று நிறுவப்பட்டது. அதன் அடிப்படையிலேயே சிம்மக்கல் எனப் பெயர் வந்தது.

### விட்டவாசல்

அம்மன் சன்னதிக்கு நேரே இருக்கின்றது. நகர் பெரிதாக்கப்பட்ட பொழுது கோட்டைச் சுவர்கள் இடிக்கப்பட்டன. அப்பொழுது இப்பகுதி மட்டும் இடிக்கப்படாமல் வைக்கப்பட்டது என்றும் அதனால் விட்டவாசல் எனப் பெயர் வந்ததுயென்று கூறுகின்றனர்.

### எழுகடல் தெரு

ஏழு கிணறுகள் இத்தெருவில் இருந்ததாகவும், காஞ்சனமாலைக்காக மதுரைக்கு ஏழு கடல்களையும் அழைத்ததாகவும், அதன் காரணமாகவே ஏழுகடல் தெரு எனப் பெயர் ஏற்பட்டது.

### தமுக்கம்

இச்சொல் தெலுங்கு சொல்லாகும். கோடை கால விடுதி என்பது இதன் பொருளாகும்.

### மாடக்குளம்

மதுரையை அழிக்க வருணன் மேகங்களை ஏவினான். அந்த மேகங்களை தடுக்க சிவபெருமான் நான்கு மேகங்களை ஏவினான். அந்த நான்கு மேகங்களும் நான்கு மாடங்களாகி தடுத்த இடமே மாடக்குளமாகும்.

### பசுமலை

சமணர்கள் மதுரையை அழிக்க பசுவினை ஏவினார்கள். அது இறைவன் அருளால் மலையானது. அதுவே பசுமலையாகும்.

### நாகமலை புதுக்கோட்டை

சமணர்கள் மதுரையை அழிக்க நாகத்தை ஏவினார்கள். அது மலையானது. அதுவே நாகமலையாகும்.

### கோரிப்பாளையம்

முகமதுகோரியின் படைகள் தங்கியிருந்த இடமே கோரிப்பாளையமாகும். பாளையம் என்பது படைகள் தங்குமிடத்தைக் குறிக்கும்.

மும் பத்து அடி சுற்றளவும் கொண்டது. பத்து தூண் அடிப்படையில் பத்துதூண் சந்து எனப் பெயர் பெற்றது.

**தமிழ்ச் சங்கம் வீதி**

மதுரை மாநகரில் வடக்கு வெளி வீதிக்கு வடபால்பாண்டித்துரைத் தேவரால் 1901ல் நிறுவப்பட்ட தமிழ்ச்சங்கம் உள்ளது. அதன் அடிப்படையிலேயே அவ்வீதிக்கு தமிழ்ச்சங்கம் வீதி என்று பெயர் ஏற்பட்டது.

**தென்னோலைக்காரத் தெரு**

முற்காலத்தில் இது பண்டு ஓலைக் கடைத் தெருவாக இருந்திருக்கும். அதன் அடிப்படையில் தென்னோலைக்காரத் தெரு எனப் பெயர் ஏற்பட்டது.

**சதாசிவ நகர்**

தியாகராசர் கல்லூரி முன்னாள் பேராசிரியர் சதாசிவம் அவர்கள் முயற்சியால் இந்நகர் உருவானதால் இந்நகருக்கு சதாசிவ நகர் எனப் பெயர் ஏற்பட்டது என்று தமிழறிஞர் தமிழண்ணல் கூறுகின்றார்.

**வளையல்காரத் தெரு**

திருவிளையாடலால் சிவபெருமான் வளையல் விற்கின்றார். அவர் வளையல் விற்ற தெரு வளையல்காரத் தெரு எனப் பெயர் பெற்றது.

**பொதும்பு**

சோலையினூடேயே அமைந்த ஊர் பொதும்பு ஆகும்.

**ஊமச்சிக்குளம்**

ஊர்மெச்சிக்குளத்தின் திரிபே ஊமச்சிக்குளமாகும்.

**கப்பலூர்**

கப்பல் ஒன்றின் மேல்தளம் போல் மேடான பகுதியில் இவ்வூர் அமைந்துள்ளதால் கப்பலூர் என்ற பெயர் பெற்றது.

**சிம்மக்கல்**

தஞ்சாவூரிலிருந்து மதுரைக்கு வந்த மல்லன் ஒருவன் சிங்கத்தை வென்றான். அவனது வெற்றியின் நினைவாக சிங்கத்துடன் வீரன்

**தோடனேரி**

நரிகள் தொடர்ந்து அடுத்து அடுத்து சென்ற இடம் தோடனேரி யாகும்.

**வண்டியூர்**

குதிரைகள் வந்து இந்தப் பகுதியில் புழுதி மண்டியதால் இவ்வூர் முதலில் மண்டியூர் என்று அழைக்கப்பட்டது. மண்டியூரே பின் வண்டியூராகியது,

**மதிச்சியம்**

குதிரைகளின் விலையை பாண்டியன் மதிப்பிட்ட இடம் மதிச்சிய மாகும்.

**பிட்டுத்தோப்பு**

இறைவன் பிட்டுக்கு மண் சுமந்த இடம் பிட்டுத் தோப்பு ஆகும்.

---

## மதுரையிலுள்ள ஊர்கள், தெருக்கள் பகுதிகளுக்குரிய பெயருக்குரிய காரணங்கள்

---

**அண்ணா நகர்**

தமிழ்நாடு முன்னாள் முதல்வர் அறிஞர் அண்ணா அவர்களின் பெயரால் அமைந்தது அண்ணா நகர்.

**அவனியாபுரம்**

அவினி சூளாமணி என்ற பாண்டியன் பெயரால் உருவானதே அவனியாபுரமாகும்.

அவரது ஆட்சிக்காலம் கி.பி. 600 முதல் 625 வரையாகும்.

**அழகப்பன் நகர்**

விடுதலை வீரர் அழகப்பர் பெயரால் உருவானதே அழகப்பன் நகராகும்.

### K. K. நகர்

தமிழ்நாடு முன்னாள் முதல்வர் கலைஞர் கருணாநிதி பெயரால் அமைந்த ஊர் **K. K.** நகராகும்.

### புதூர்

புதிதாக எழுந்த ஊர் புது ஊரராகும்.

### S. S. காலனி

சோமசுந்தரம் காலனி என்பதின் சுருக்கமே **S. S.** காலனி ஆகும்

### சொக்கிகுளம்

மதுரை நாயகர் சோமசுந்தரருக்கு தூய தமிழ் பெயர் சொக்க நாதர். மதுரை நாயகியின் பெயர் சொக்கியாகும். ஆலவாய் அரசி சொக்கியின் பெயரால் உருவானதே சொக்கிகுளமாகும்.

### ஆண்டார் கொட்டாரம்

தல்லாகுளம் அருகிலுள்ளது. மதுரையை ஆண்ட பாண்டியர்களின் அரண்மனைகள் இந்த இடத்திலிருந்தது.

### ஆயத்தப்பட்டி

நான்கு கிராமத்தார் அழகர்கோவில் திருவிழாவில் தேர் இழுக்க இங்கு கூடி ஆயத்தம் ஆவார்கள்.

### நரசிங்கம்

இரணிய முட்டம் என்பது இதன் பழைய பெயர். ஆனை மலையின் அடிவாரத்திலுள்ளது. நரசிம்மர் கோவில் இங்குள்ளது. நரசிம்மர் பெயரால் இவ்வூரின் பெயர் நரசிங்கமாகும்.

### நரிமேடு

சொக்கநாதர் மாணிக்கவாசகருக்காக நரிகளை குதிரைகளாக்கிய இடமே நரிமேடாகும்

### செல்லூர்

குதிரைகள் நரிகளாக மாறி சென்ற இடம் செல்லூர்

### தத்தனேரி

அந்த நரிகள் கத்திக் கொண்டு சென்ற இடம்
கத்த நரி என்பது ஆகும். அதுவே தற்பொழுது தத்தனேரி என்று அழைக்கப்படுகின்றது.

9) எம். எஸ். எஸ். வக்ப் வாரியக் கல்லூரி — 1968

தமிழ்நாடு வக்ப் வாரியத்தால் இக்கல்லூரி தொடங்கப் பட்டது.

10) திருமலை நாயக்கர் கல்லூரி — 1974

மன்னர் திருமலை நாயக்கர் கல்விக் கட்டளையால் ஆரம்பிக்கப்பட்டது.

11) விவேகானந்தர் கல்லூரி — 1971

**கல்வி நிறுவனங்கள் :**

**அமெரிக்கன் கல்லூரி**

தொடக்கப்பள்ளியாக 1842ல் தொடங்கப்பட்டது. 1881ல் கல்லூரியானது. இது ஒரு தனியாட்சிக் கல்லூரியாகும். கம்ப்யூட்டர் வசதி கொண்டது. தொலைபேசி 43387

**மதுரைக் கல்லூரி**

1880ல் தொடக்கப்பள்ளியாக தொடங்கப்பட்டு 1915ல் கல்லூரி யானது. இது ஒரு தனியாட்சிக் கல்லூரியாகும். டி. வி எஸ். குடும்பத்தினர் இக்கல்லூரியின் வளர்ச்சிக்கு பெரிதும் துணையாக உள்ளனர்.

தொலைபேசி 22454

**டோக் சீமாட்டிக் கல்லூரி**

இது ஒரு தனியாட்சிக் கல்லூரியாகும். 1948ல் இந்த மகளிர் கல்லூரி தொடங்கப்பட்டது. மதுரை ஆலை இயக்குநர் டோக் துரையின் மனைவி டோக் சீமாட்டி பெயரால் தொடங்கப்பட்டது

தொலைபேசி 43222

**மதுரை மருத்துவக் கல்லூரி :**

இக்கல்லூரி 1954 ல் தமிழ்நாடு அரசால் தொடங்கப்பட்டது.

**சட்டக்கல்லூரி :**

மதுரை சட்டக் கல்லூரி 1974ல் தொடங்கப்பட்டது.

தொலைபேசி 43395

### அழகர் நகர்

விடுதலை போராட்ட வீரர் அழகர் பெயரால் அமைந்த நகர் அழகர் நகரமாகும்.

### ஆழ்வார்புரம்

புரம் என்றால் சிறந்த ஊர் என்று பொருள். ஆழ்வாரால் சிறப்பிக்கப் பெற்ற ஊர் ஆழ்வார்புரமாகும்.

### இருந்தையூர்

கூடலழகர் கோவிலைச் சூழ்ந்துள்ள பகுதி பழங்காலத்தில் இருந்தையூர் என வழங்கப்பட்டதாக பேராசிரியர் மு. இராக வையங்கார் கூறுகின்றார்.

### உத்தங்குடி

குடி என்பது ஒரு இனத்தவர் குடியிருப்பை அல்லது மக்கள் குடியிருப்பை குறிக்கும். ஒத்தக்கடைக்கும் தல்லாகுளத்திற்கும் இடையே உத்தங்குடி அமைந்துள்ளது.

### யானைமலை ஒத்தக்கடை

சமணர்கள் மதுரையை அழிக்க பெரிய யானையை ஏவினார்கள் அந்த யானையை இறைவன் வென்றான். அந்த யானை மலை-யானது. அதுவே யானைமலை ஒத்தக்கடையாகும். இந்த யானை மலை மதுரை–மேலூர் சாலையிலுள்ளது.

| | கல்லூரி | | தொடங்கிய ஆண்டு |
|---|---|---|---|
| 1) | யாதவர் கல்லூரி | — | 1969 |
| 2) | சௌராசுட்டிரக் கல்லூரி | — | 1967 |
| 3) | வெள்ளைச்சாமி நாடார் கல்லூரி | — | 1965 |
| 4) | இ. மா. கோபால கிருட்டிண யாதவர்மகளிர் கல்லூரி | — | 1974 |
| 5) | தியாகராசர் நிர்வாக படிப்பு நிலையம் | — | 1962 |
| 6) | தமிழ்நாடு அரசு இசைக் கல்லூரி | — | 1979 |
| 7) | சத்குரு சங்கீத் வித்யாலயம் | — | 1969 |
| 8) | சரசுவதி நாராயணன் கல்லூரி | — | 1966 |

**இக்கல்லூரியின் நிறுவனர் : லெ. நாராயணன் செட்டியார்**

## தியாகராச பொறியியல் கல்லூரி

1958ல் இக்கல்லூரி கருமுத்து தியாகராசச் செட்டியாரால் தொடங்கப்பட்டது. பட்டப்படிப்பு, ஆராய்ச்சிப்படிப்பு, பகுதி நேர படிப்பும் உள்ளது.

## தியாகராசர் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி

தியாகராசச் செட்டியாரால் 1956ல் தொடங்கப்பட்டது. பி.எட். பட்டம் பெற பயிற்சி தருகின்றது.

## மதுரைப் பல்கலைக்கழகம்

தொலைபேசி 33171

தொடக்கம் 1966

இடம் : மதுரையிலிருந்து 12 கி. மீ. தொலைவில் உள்ள நாகமலை புதுக்கோட்டை

1978ல் மதுரைப் பல்கலைக்கழகம் மதுரை காமராசர் பல்கலைக் கழகமாக மாறியது.

## துணை வேந்தர்கள்

1) தெ. பொ. மீனாட்சி சுந்தரனார்

2) டாக்டர் மு. வரதராசனுர்

3) தமிழ் அறிஞர் வ. சுப. மாணிக்கனுர்.

4) இருட்டிணசாமி அவர்கள்

5) லட்சுமணன் அவர்கள்

6) பேராசிரியர் குத்தாலிங்கம் அவர்கள்

| | | தொடக்கம் |
|---|---|---|
| 1) | அரசு காட்சிக் கூடம் | 11–10–1980 |
| 2) | மதுரை வானெலி நிலையம் | 1988 |
| 3) | காவல் துறை ஆணையாளர் அலுவலகம் | 14–4–1990 |
| 4) | மதுரை தமிழ் இசைச் சங்கம் | 1974 |

தொலைபேசி 41954

## புகழ் பெற்றவர்கள்

1) பி. டி. ராசன்
2) வைத்தியநாத அய்யா
3) டாக்டர் எம். எஸ். சுப்புலட்சுமி
4) கருமுத்து தியாகராச செட்டியார்
5) சௌந்தரம் இராமச்சந்திரன்
6) பி. ராமமூர்த்தி
7) கோடி கே. தங்கமணி
8) மதுரை சோமு
9) மதுரைமுத்து
10) ந. ம. ரா. சுப்புராமன்
11) அரசஞ்சண்முகனார்
12) ப. நெடுமாறன்
13) T.M. சௌந்தரராசன்
14) கவிகுஞ்சர பாரதி
15) வித்துவான் பொன்னுசாமி பிள்ளை

## பரிதிமாற் கலைஞர்

இவரது இயற்பெயர் வி. கோ. சூரியநாராயண சாஸ்திரி மதுரையை அடுத்த விளாச்சேரியில் பிறந்தவர்

## டாக்டர் வ. சுப. மாணிக்கம்

நான்கு மாடங் கூடுவதால் மதுரைக்கு நான்குமாடக்கூடல் என்று பெயர் வந்ததுயென்று வ. சுப. மாணிக்கனார் கூறியுள்ளார்.

அந்த நான்கு மடங்களாக அவர் கூறுவது 1) திருவாலவாய 2) திருநள்ளாறு 3) திருமுடங்கை 4) திருநடுவூர் என்று குறிப்பிட்டுள்ளார்

## மதுரை ஆயிர வைசியர் மேல் நிலைப் பள்ளி

1896ல் தொடக்கப் பள்ளியாக தொடங்கி 1967ல் உயர் நிலைப் பள்ளியாகி 1980 ல் மேல் நிலைப்பள்ளியானது.

## சுவையான செய்திகள்

1) மதுரையில் தான் அரிசனங்களின் ஆலயப்பிரவேசம் முதன் முதலில் நடந்தது

கலைஞர்கள் 200 பேருக்கு மேல் உள்ளனர்

5 இன்றைக்கு மதுரையில் புகழ் பெற்ற நிறுவனமான ராஜா பார்லே பிஸ்கெட் கம்பெனி 1926ல் ஏ. சங்கு பிள்ளை அவர்களால் துவக்கப்பட்டது

6 ஜீபிடர் எலெக்ட்ரிக் ஸ்டோர்ஸ் 1956ல் தொடங்கப்பட்டது மதுரையில் மிகப் பெரிய இந்த எலெக்ட்ரிக் நிறுவனத்தின் உரிமையாளர் எம். கே. பாலகிருஷ்ணன் அவர்கள்

7 திருமங்கலத்தில் மாப்பிள்ளை விநாயகர் கோவிலுள்ளது அதன் அடிப்படையில் ஸ்ரீ மாப்பிள்ளை விநாயகர் நிறுவனம் என்ற பெயருடன் இந்த நிறுவனம் சிறப்புற்று விளங்குகின்றது இதன் உரிமையாளர் கதிர்வேல் அவர்கள்

## கள்ளழகர்

கள்ளழகர் வைகை ஆற்றில் இறங்கும் போது எந்த நிறத்தில் பட்டு ஆடை அணிந்துள்ளாரோ அதன்படியே ஆண்டின் பலன்கள் அமையும் பல நிறமுள்ள பட்டு ஆடைகளை ஒரு பெட்டியில்வைத்து பெட்டியில் கையை விட்டு எடுப்பார்கள் பெட்டியில் கையை விட்டு எடுக்கும் பொழுது எந்த பட்டு ஆடை வருகிறதோ அந்த ஆடை கள்ளழகருக்கு அணிவிக்கப்படும். இந்த ஆண்டு (17-4-92) அவ்வாறு எடுக்கப்பட்ட போது வெள்ளைப் பட்டு ஆடை வந்தது ஆதலால் இந்த ஆண்டு அமைதிமிக்கதாக இருக்குமென்று ஆருடர்கள் கூறுகின்றனர்.

## புகழ் பெற்ற நடிகர்கள்

விஜயகாந்த், ப்ாண்டியன் ஆகியோர் மதுரையைச் சார்ந்தவர்கள் புகழ்பெற்ற இசைமேதை இளையராசா, கங்கைஅமரன் இயக்குநர் பாரதிராசா, T. R. பாசுகர் ஆகியோர் மதுரை மாவட்டத்தை சார்ந்தவர்கள்.

---

## மதுரை மல்லி

புகழ் பெற்றது இந்த மல்லிகையை நம்பி 10,000க்கு மேற்பட்ட விவசாயிகள் உள்ளனர்.

2 கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள பூதப்பாண்டியபுரம் மதுரையை ஆண்ட பூதப்பாண்டியன் பெயரால் அமைந்துள்ளது

3 மன்னர் கோச்சடையன் ரணதீரன் பெயரால் உருவானதே **கோச்சடை** யாகும்

4 சுந்தரபாண்டியன் ஆட்சிக் காலத்தில் சீன நாட்டை சார்ந்த **யுவான்சுவாங்** மதுரைக்கு வந்து தாம் கண்டவற்றை எழுதியுள்ளார்

5 சுந்தரபாண்டியன் பெயரால் உருவானதே சுந்தரபாண்டியபுரமாகும்

6 மதுரைக்கு ''நீள்மாடக்கூடல்'' பொலம்புரிசைக் கூடல் என்ற பெயர்களும் உண்டு

7 1976ல் மதுரையின் பரப்பு 16 கிலோ மீட்டர் மக்கள் தொகை நான்கு லட்சம்

8 தமிழ்கெழுகூடல், தமிழ்ப்பெருங்கூடல், தண்டமிழ்க்கூடல், தெய்வத்தமிழ்க்கூடல், தண்டமிழ் ஆலவாய், தமிழ்மதுரை என்ற பெயர்களும் மதுரைக்கு உண்டு

9 மதுரைக் கோட்டையைச் சுற்றி மாலை போல வையை ஓடுதலால் வையைக்கு கிருதமாலை என்ற பெயரும் உண்டு.

---

## செய்திகள்

தேவர்முரசு சுந்தரபாண்டியன்
மதுரை.

---

1 நம் தமிழர் இயக்கத்தை ஆதித்தனர் துவக்கியது மதுரையில் தான் ஆகும்

2 மதுரை நேதாசி சாலையிலுள்ள மாடர்ன்ரெஸ்டாரெண்ட் 1948ல் துவக்கப்பட்டது. இதன் உரிமையாளர் வி.எம். சதாசிவம்

3 மதுரை நியூகாலேசு உரிமையாளர் என். மணிமொழியன் அவர்கள் தமிழ் பற்று மிக்கவர் இவர் மாநில திருக்குறள் பேரவையின் பொதுச் செயலர்

4 மதுரை முனிச்சால்லயில் கரகாட்ட கலைஞர், கிராமியக்

**துலாம்**

திருமணம் போன்ற சுப நிகழ்ச்சிகள் பிரச்சனைகள் இருந்த போதிலும் கடைசி நேரத்தில் நலம் உண்டு வெளிநாடு வெளி மாநிலம் சென்று வர வாய்ப்பு உண்டு. குடும்பத்தில் சுப விரைய செலவு உண்டு.

**விருச்சிகம்**

பூர்வீக சம்பந்தப்பட்ட சொத்துக்கள் மூலம் ஆதாயம் அரசாங்க ஆதரவு உண்டு. நண்பர்கள் பெரியோர்கள் மூலம் காரிய ஜெயம் உண்டு குழந்தைகள் சம்பந்தப்பட்ட நீண்ட கால வைப்பு நிதி சீட்டு கள் போன்றவை ஆரம்பித்து செயல்பட்டால் ஆதாயம் உண்டு.

**தனுசு**

பெரியோர்களிடத்தில் கவனமாக செயல்படவும். வீடு நிலம் போன்றவை மூலம் சங்கடம் ஏற்படும். மாத பிற்பகுதியில் எதிர்பாராத ஆதாயம் உண்டு. வழக்குகள் வெற்றி தரும் பிரயாணங்கள் மூலம் ஆதாயம் உண்டு. தீர்த்தயாத்திரை உண்டு.

**மகரம்**

எதிலும் காரிய ஜெயம். எதிர்பாராத உதவி கிடைத்தல் உத்யோகஸ்தர்களுக்கு அரசாங்க ஆதரவு உண்டு சொத்துக்கள் வாங்குதல் போன்றவை ஏற்படும். சிலருக்கு உடல் நிலையில் கவனம் தேவை.

**கும்பம்**

வாகனம் வாங்குதல் இடப்பெயர்ச்சியினால் ஆதாயம் திருமணம் போன்ற சுப நிகழ்ச்சிகள் உண்டு வியாபாரிகள் எதிர் பார்த்த லாபம் அடைவார்கள்.

**மீனம்**

தீர்த்தயாத்திரை குடும்பத்தில் சுப காரியம் எதிர்பார்த்த தன பிராப்த்தி உத்யோக உயர்வு சொத்துக்கள் சம்பந்தப்பட்ட பிரச்சனைகள் மூலம் ஆதாயம் தீர்த்தயாத்திரை ஏற்படும்.

---

மதுரை காமராசர் பல்கலைக் கழக நூலகத்தில் 101, 000 நூல்கள் உள்ளது. காலை 9 மணி முதல் இரவு 9 மணி வரை நூலகம் இடைவிடாமல் திறந்துள்ளது.

மதுரை மாவட்டத்தின் தற்போதைய ஆட்சித்தலைவர் ஆதிசேஷய்யா அவர்கள் மதுரை மாநகராட்சி ஆணையாளர் டேவிதார் அவர்கள்.

23–4–1943ல் மதுரை வங்கி மதுரையில் கருமுத்து தியாகராசரால் தொடங்கப்பட்டது.

மதுரை வைகை விரைவுவண்டி 15–8–77ல் தொடங்கப்பெற்றது.

மதுரையில் தமிழ் அன்னை சிலை ஐந்தாம் உலகத் தமிழ்மாநாடு 4, 5-10–81ல் நடைபெற்ற பொழுது முதல்வர் எம். ஜி. ஆர். அவர்களால் திறந்து வைக்கப்பட்டது.

---

# ஆருடம்

P. சங்கர்

சின்னக் கடைத் தெரு, தெற்கு வாசல், மதுரை-1.

14-5-1992 to 14-6-1992

---

**மேஷம் :**

சுமாரான பலன்கள் நடக்கும். காரியங்கள் கடுமையான பிரயாசையின் பேரில் சமாளிக்கப்படும். குடும்பத்தாரிடம் கவனமாக நடந்து கொள்வது நல்லது. உடல் நிலை கவனம் தேவை. புதிய முயற்ச்சிகள் தவிர்க்கவும்

**ரிஷபம் :**

அரசாங்க ஆதரவு இடப்பெயர்ச்சியினால் ஆதாயம் உண்டு. கூட்டு தொழில் புதிய முயற்ச்சிகள் பலன் தரும். எதிர்பாராத திடீர் தன பிராப்தி உண்டு. வாகன யோகம் உண்டு.

**மிதுனம் :**

தொழில் முடக்கம் அரசாங்க சிக்கல் போன்றவை ஏற்படும். நண்பர் மூலம் சங்கடம் ஏற்படும். வழக்குகள் கவலை தரும் மாத கடைசியில் நலம் உண்டாகும்.

**கடகம் :**

எதிர்பார்த்த காரியங்கள் கைகூடிவரும். தீர்த்த யாத்திரை குடும்பத்தில் சுப செய்திகள் ஏற்படும். புதிய தொழில் தொடக்கம் போன்றவை ஏற்படும். உடல் நிலையில் சிறு சிறு பாதிப்பு ஏற்பட்டு விலகும்.

**சிம்மம் :**

திடீர் செலவுகள் குடும்பத்தில் அமைதி குறைவு ஏற்படும் பொருளாதார நெருக்கடி தோன்றி மறையும் அரசாங்க உத்தியோகஸ்தர்கள் கவனம் தேவை. பிறர் விசயங்களில் தலையிட வேண்டாம்.

**கன்னி :**

மனைவியின் உடல் நிலை பாதித்தல் நண்பரால் ஏமாற்றம் உத்தியோக பாதிப்பு பிரயாணங்கள் தவிர்க்கவும் செவ்வாய் திசை நடப்பவர்கள் பரிகாரம் செய்து கொள்வது மிகவும் நல்லது. மாத பிற்பகுதியில் நல்ல பலன்கள் நடக்கும்.